# தேவி வழிபாடு



தொகுப்பாசிரியர்

பேராசிரியர் தெ. முருகசாமி

வெளியீடு :

இலக்கியக் கழகம்

காரைக்குடி.

ஸ்ரீமுக—வைகாசி : 20

2–6–1993

காரைக்குடி.

டாக்டர் ரெ. முத்துக்கணேசனார்

மகள் மீனாட்சி

திருமண வெளியீடு

# பதிப்புரை

கவிச்செம்மல் டாக்டர் ரெ. முத்துக்கணேசனார் வீட்டுத் திருமண நினைவாக வெளியிடப்பெறும் தேவி வழிபாடு என்னும் இந்நூல் காரைக்குடி இலக்கியக் கழகத்தின் வெளியீடாகும்.

கவிஞர் அவர்கள் பாடிய அம்மன் பாடல்களை மட்டும் தொகுத்து அவற்றிற்கான கணிப்புரையாக முன்னுரை ஒன்றையும் எழுதித் தந்துள்ளார் காரைக்குடி இராமசாமி தமிழ்க்கல்லூரி முதல்வர் தெ. முருகசாமி.

மீனாட்சி என்னும் தம் மகளை கருப்பன் செட்டி என்ற சந்திரனுக்கு வாழ்க்கைத்துணையாக்கி மகிழும் கவிஞர் ரெ. மு. அவர்கள் ''நல்ல நூல் ஒரு நல்ல துணைவன்'' என்றபடி அனைவருக்குமாக இந்நூலைத்தந்து துணையாக்கும் பெருமை பாராட்டுக்குறியது.

முன்னுரை தந்த முதல்வருக்கும் சிறப்பாக அச்சிட்டு உதவிய சௌத் இந்திய அச்சகத்தார்க்கும் நன்றி உரியதாகுக.

இலக்கியக் கழகத்தின் சார்பில் தேவி வழிபாடு என்னும் இவ் அருள் அமுதை இத்திருமண விழாவில் வெளியிட்டு வழங்குவதில் மிக்க மகிழ்ச்சியடைகின்றோம்.

தேவி வழிபாட்டைத் தேர்ந்துபடித் தின்புறவே
தாவிவரும் தக்க வளம்.

இங்ஙனம்

காரைக்குடி,
2-6-93

செல்வி. வீர. சிவராமன்
இலக்கியக் கழகம்

காரைக்குடி

இராமசாமி தமிழ்க் கல்லூரி முதல்வர்,

பேராசிரியர் தெ. முருகசாமி அவர்கள்

தந்தருளிய

# முன்னுரை

---

இயற்கையின் மாண்பு மகத்தானது. அதை ஊடுருவிப் பார்க்கும் பார்வையில் விஞ்ஞான மெய்ஞ்ஞானங்களின் முயற்சிகளும் மகத்தானவை. உலக தோற்றத்திலும் அதற்கு அப்பாலும் ஏதோ ஒன்று இருக்கிறது எனக் கண்டது மெய்ஞ் ஞானம். காணுகின்ற அண்ட கோள இயக்கத்தின் அன்றாட நிகழ்வுகளுக்கும் மாற்றங்களுக்கும் மூலம் ஒன்று உண்டு எனக்கண்டு தெளிந்து கொண்டே இருப்பது விஞ்ஞானம். இவ்விஞ்ஞான மெய்ஞ்ஞானங்கள் வேறு வேறு திசையில் சென்றாலும் அடைகின்ற இடம் ஒன்றே. அதுதான் உலக இயக்கத்தின் ஆதார சுருதியாக உள்ள ஓர் ஆற்றல் என்ற ஒன்று. இவ்வாற்றலையே தெய்வீக ஆற்றல் என்றும் அழியா ஆற்றல் என்றும் கூறுவர்.

ஆற்றலைச் சக்தி என்று அழைப்பர். உலகம் ஆற்றல் வாய்ந்தது என்ற உண்மையை இச்சக்தி என்ற சொல் உணர்த்துகிறது. சக்தி என்ற சொற்பொருள் மாறாமல் சத்தி என்ற சொல் தமிழிலும் உண்டு. உயிரினங்கள்

வழி வழியாகத் தோன்றி மறைந்து வாழ்தல் உண்மை யாதலால் உலகம் என்பது சத்தியப் பொருளாகும்.

இலக்கியம் என்ற சொல் இலக்கு + இயம் எனப் பிரியும் அவ்வாறே சத்தியம் என்ற சொல்லையும் சத்து + இயம் எனப் பிரிக்கலாம். ஊட்டமானது (சத்தானது) என்ற கருத்தில் சத்து சொல் அடிப்படையான சத்தான ஒருவேர்ச் சொல்லாகும். ஆற்றலுடைய ஒன்றுதான் சத்தானதாக இருக்கும். உலகின் எப்பக்கம் திரும்பினும் ஆற்றலின் சிறப்பு கணக்கிட முடியாததாக உள்ளதால் எல்லாம் சக்திமயம் என்றனர் ஆன்றோர். ''எங்கெங்குக் காணினும் சக்தியாடா'' என்பது பாவேந்தர் பாரதிதாசனாரின் முதற்பாட்டு. இதில் இயற்கையின் ஆற்றல் பொலிவுறக் காட்டப்பட்டுள்ளது.

எங்கெங்குக் காணினும் சக்தியடா — தம்பி
ஏழுகடல் அவள் வண்ணமடா — அங்குத்

தங்கும் வெளியினிற் கோடியண்டம்! — அந்தத்
தாயின் கைப்பந்தென ஓடுமடா

இப்படி விஞ்ஞான மெய்ஞ்ஞான கண்டுபிடிப்பின் கருப்பொரு ளாக விளங்குவது சக்தி.

பொதுவாக சக்தியின் வெளிப்பாட்டை நம் தாய் தந்தை யரைக்கொண்டே உணரலாம். தந்தையிடம் தனையன் பழகுவதற்கும் தாயிடம் தனையன் பழகுவதற்கும் வேற்றுமை உண்டு. வயது முதிரமுதிர தந்தை தனயைர்களுக்கிடையே வேற்றுமை அதிகரிக்கும். ஆனால் தாயிடத்தில் எப்போதும் ஒரே சீரான அன்பையே உணர முடியும். நன்றே செயினும் பிழையே செயினும் மகனை அன்னியப் படுத்தாமல் அர வணைக்கும் தாய்போலத் தந்தை அரவணைப்பதில்லை. அஃது தந்தையின் குறையன்று இயல்பு. எனவேதான் ''கன்றினுக்குச் சேதா கனிந்திரங்கல் போல் எனக்கென் றிரங்குவாய் கருணைஎந்தாய் பராபரமே'' எனக் கடவுளைத்

தாயாக்கிப் பார்க்கும் மனநிலை தாயுமானவர் போன்ற சான்றோர்க்கு ஏற்பட்டது. இந்தவகையாகச் சக்தியைத் தாய்மை வழியில்கண்டு அத்தாய்மைக்கு அன்பை மூலப் பொருளாகச் சுட்டினர் ஆன்றோர்.

பெண்மைமிக்க தாய்மையின் அன்பு மென்மை வாய்ந்தது. மேலும் ஆற்றல் வாய்ந்தது. ஆற்றல் வாய்ந்த எதுவும் அன்புடைய மென்மையாகவும் இருக்கும். மென்மை யான அன்புடைய எதுவும் ஆற்றலுடையதாக இருக்கும். கன்றிடம் அன்பைப் பொழியும் பசுவினிடத்தில் சென்றால் முட்டித் தள்ளும். வீரத்திற்குரிய கொம்பிருந்தாலும் கோ மாதாவின் அன்பு அளப்பரியது. ஆக வன்மையும் மென்மை யும் அன்பின் ஆற்றலுடைய அதி சூட்சுமப் பொருளாக உள்ளதால் அன்பின் வடிவமாகக் காணப்படும் பெண்தன்மை மிக்க சக்தியால் ஆக்கவும் முடியும் அழிக்கவும் முடியும் எனத் தெரிகிறது. எனவே இயற்கைச் சக்திக்கு (ஆற்றலுக்கு) அழிவில்லை (conservation of Energy) என்பதும் உறுதி யாகிறது.

இந்த அழியா ஆற்றலையே சக்தி வழி பாடாக உல கெங்கிலும் உள்ள மக்கள் போற்றிவந்துள்ளனர். பாரசீகம் துருக்கி, சிரியா, எகிப்து, மெசபடோமியா, பாலஸ்தீனம் சைப்பிரஸ் போன்ற நாடுகளில் காணும் பெண் தேவதை உருவச் சிலைகள் சிந்துவெளி அகழ்வாராய்ச்சியில் கிடைத் துள்ள சக்தித் திருவுருவச் சிலைகளைப் போலவே காணப் படுகின்றன. வடநாட்டில் ருக்வேதத்தில் சக்தி வழிபாடு தனியே பேசப்படுகிறது. வங்காளத்தில் காளியாகச் சக்தியை வழிபட்டனர். மிகப்பழந்தமிழ் நூலாகிய தொல்காப்பியத்தில் பாலை நிலத்தெய்வமாகக் கொற்றவை பேசப் படுகிறாள். வீர வணக்க வழிபாட்டிற்குக் கொற்றவையைக் கொண் டாடிய சிறப்பைப் புறநானூறு பேசுகிறது. சங்கம் மருவிய காப்பிய காலத்தில் கொற்றவை வழிபாடு மிகுதியும் இருந்த தாகச் சிலப்பதிகார வேட்டுவவரியால் உணரக் கிடைக்கிறது. பின்னர் எழுந்த சிற்றிலக்கியப் பரணியில் காளி என்றும் காடுகிழாள் என்றும் பெண் தெய்வம் பேசப் படுகின்றது.

கி. மு. 4000 ஆண்டுகளுக்கு முற்பட்டதாகக் கருதப்படும் சிந்துவெளி மொகஞ் சொதரா, ஹரப்பா அகழ்வாராய்ச்சியின் கண்டுபிடிப்புகள் தென் தமிழகத்தின் பண்பாட்டைப் பளிச் செனக் காட்டுவதால் மிகப் பழங் காலத்திற்கு முன்னரே சக்தி வழிபாடு தோன்றியிருக்க வேண்டும் எனத் தெரிகிறது. எனவேதான் சக்திக்குப் ''பழையோள்'' என்ற பெயர் கொடுத்துப் பொருத்தமாகச் சுட்டப் பட்டுள்ளதைச் சங்க இலக்கியத்தால் உணர முடிகிறது.

குறிப்பிட்ட கடவுட் கொள்கையை வரையறுத்த தமிழர் தம் வரலாற்றில் பல்வேறு சமயப் பிரிவுகள் காலப்போக்கில் தோன்றலாயின. சிவனை வழிபட்டதைச் சைவம் என்றும் கணபதியை முதன்மையாகக் கொண்டதைக் காணாபத்தியம் என்றும் குமரக்கடவுளைத் தலைமையாகக் கொண்டதைச் கௌமாரம் என்றும் சக்தியைப் பரம் பொருளாகக் கொண் டதை சாக்தம் என்றும் திருமாலை வழிபட்டதை வைணவம் என்றும் பெயர் பெற்றன.

ஆண்மைக்கு இணையாகப் பெண்மை மதிக்கப் பட்டாலும் அன்பு, அருள், வெறி, வேகம், வெற்றி வீரம் கொண்ட முழுமையான பெண்மை ஆணினும் சக்தி வாய்ந்தது என்பதால் சாக்தவழிபாடு என்ற சக்திக்கான தனி வழிபாடு இன்று வரை சிறப்பாக நிலைத்திருக்கக் காண் கிறோம். இச்சக்தி வழிபாட்டுத் தாக்கத்தால்தான் பாரதி யாரும் தேசபக்தியைத் தாய் வழிபாடாக எடுத்துக் கொண்டாடினார் போலும் !

சக்தியை ஆண்தெய்வத்திற்குத் (சிவத்திற்கு) தேவியாகக் கொண்டாலும் இரண்டும் இணைந்த உருவமாகவே சிவலிங் கத்தைக் கண்டனர் ஆன்றோர். எனினும் காலப்போக்கில் சக்தியின் தனித்துவம் நோக்கி சிவாலயங்களில் தனி அம்மன் கோயில்கள் கட்டப்பட்டன. மேலும் இதன் வளர்ச்சியாகவே தனியாகச் சக்தித் திருக்கோயில்கள் ஆங்காங்கே உரு வெடுத்தன. அவை சக்திப்பீடங்கள் என்ற பெருமையும் பெற்று வளர்ந்து வருவதை இன்று நன்குணரலாம். காஞ்சி

காமாட்சி, மதுரை மீனாட்சி என்பன சிவாலயங்களின் உள்ளே உள்ள சக்திகள். சமயபுரம், திருவேற்காடு, மேல் மருவத்தூர் போன்றவை தனியான சக்தி பீடங்கள். என்றாலும் சிவனது அருளே சக்தி என்பதால் உலக இயக்கத் திற்கான மூலக் கூறும் சிவ சக்தியாகவே இருக்கக் கூடும் என்ற அடிப்படை உண்மையில் கடவுளை நீலமேனி வாலிழை பாகத்து ஒருவனாகக் கண்ட பெருமை தமிழர்களையே சாரும். அந்த வாழையடி வாழையான மங்கை பங்கத் தெய்வசக்தி யைப் போற்றி வழிபடும் சான்றோர் வரிசையில் காரைக்குடிக் கவிஞர்கோ, டாக்டர் ரெ. முத்துக்கணேசனாரும் ஒருவ ராவார். அவர்கள் சக்திப் பாமாலைகளாகப் பாடியதைத் தொகுத்ததே அன்பர்கள் ஏந்தியுள்ள இந்நூலாகும்.

"அன்னை சக்தி பல்வேறு வகையாகக் காட்சியளிக் கின்றாள். கண்ணால் காண முடியாத ஆனால் கருத்தால் உணரத்தக்க எங்கும் நீக்கமற நிறைந்திருங்கும் பராசக்தி யானவள் மகாமாரியாக இருந்து உலகைப் படைக்கிறாள் ; இலக்குமியாக இருந்து வளத்தைக் கொழிக்கிறாள் : சரசு வதியாக இருந்து அறிவைத் தருகிறாள் ; மாகாளியாக இருந்து தீமையை அழிக்கிறாள்" என்பது மார்க்கண்டேய புராணம் கூறும் சக்தித் தத்துவக் கருத்தாகும். தேவி மகாத் மியத்தில் மகாலட்சுமிதான் எல்லாம் எனக் கூறப்பட்டுள்ளது. இந்த அடிப்படையில் அன்னை பராசக்தியை அம்மையாக, மீனாட்சியாக, கொப்புடையாளாக, நாச்சியாக, திருமகளாக, கலைமகள் வாணியாகக் கண்டு காட்டுகிறார் கவிஞர்கோ.

இத்தெய்வப் பனுவல் அம்மை திருப்பல்லாண்டில் தொடங்கி கலைவாணியில் முடிகிறது பாடல்கள் எளிய இனிய பதங்களால் அழகொழுகப் பாடப்பட்டுள்ளன. மின்னல் வெட்டான உவமைகளும் பழம்பாடல் சாயல்களும் ஆங் காங்கே பளிச்சிடுகின்றன. சக்தி தத்துவத்துடன் சைவ சித் தாந்த கருத்துக்கள் ஊடுருவுகின்றன. உலகியல் உண்மைகள் தலைக்காட்டுகின்றன. பொதுவாக அன்னை பராசக்தியைச் சரணடையத் தூண்டும் தோத்திரப் பாடல்களாகவே இந்நூல் பரிமளிப்பதைக் கற்பார் உணர்வர் என்பதில் ஐயமில்லை.

கடவுளுக்குப் பல்லாண்டு பாடுவது ஓர் உபசார வழக்கே யாயினும் ''வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான்'' என்ற திருவாசகப் படி அம்மையிடம் கொண்ட ஆர்வத்தால் பரவசப்பட்டுப் பாடியதே அம்மை திருப்பல்லாண்டு. ''பல்லாண் டிசை கூறும் பக்தர்கள் சித்தத்துள் புக்குத் தேடிக் கண்டு கொண்டேன் திருவாரூர் அம்மானே'' என்ற திருநாவுக்கரசர் தேவாரக் கருத்தைப் போலத் தம்முள் அம்மை குடி கொண்ட திறத்தை அவளுக்குப் பல்லாண்டு கூறுவதன் மூலம் வெளிப் படுத்துகிறார் கவிஞர்கோ.

உலக இயக்கத்தின் மூலங்கள் ஆண் பெண். இவ்வுண் மையைச் சிவ சக்தியாகத் தொடங்கி அதற்குப் புதியதோர் உவமையை எளிமையாகத் தருகிறார் கவிஞர்.

சிறந்தொளிர்சேர் செம்பூவும் பசுந்தழையும்
சேர்ந்தனபோல் சிவமும் நீயும்
அறந்தழைக்க நேர்பாதி கலந்தகோல
அழகு

ஈண்டுச் சிவத்திற்குப் பூவும் அம்மைக்குத் தழையும் உவமை களாகும். சிவன் செக்கச் சிவந்த செம்மேனியன் என்பதற் கேற்ப அவனைச் செம்பூ என்றார் கவிஞர். அம்மையோ கரியள். கருமையின் இனமே பசுமை, இப்படியன் இந் நிறத்தன் இவ்வண்ணத்தன் என்று எப்படியும் எழுதிக் காட்டவொண்ணா சிவசக்தியைச் செம்மை பசுமை வண்ணங் களாகத் தீட்டிக்காட்டிய பாத்திறம் பாநலம் சார்ந்ததாகும்.

அம்மை திருப்பல்லாண்டிலும் ஆறாவதாக உள்ள திரு மகள் திருக்குறுந் தாண்டகத்திலும் சக்தியின் பெயரைப் பண்புகளாகவே சுட்டிக் காட்டியுள்ளார் கவிஞர். அழகு அன்பு, அருள், புதுமை, எளிமை, புகழ், பரிவு போன்ற பண்புகளாக உள்ள இறைவியின் தோற்றம் கருத்தால் உணரத்தக்கதன்றி வடிவால் காண்பதரிது என்ற இறைத்

தத்துவத்தைச் சொற்கள் வாயிலாகக் காட்டியுள்ளது சிறப்பாக உள்ளது. 'படி எழுத ஒண்ணாத பல் வளையாய்'' என்ற தொடர் ''ஓவியத்தில் எழுத ஒண்ணா உருவத்தாயே'' என்ற கம்பரின் பாடலை நினைவூட்டுகிறது.

தேவியின் திருப்பெயர்கள் பண்புகளாகச் சுட்டப்படினும் பாடல்கள் தோறும் அவளைக் குறிப்பிடும் சில சொற்கள் அவள் வீற்றிருக்கும் பல்வேறு தலப் பெயர்களைப் படிப்பார்க்கு நினைவூட்டுமாறு பாடப்பட்டுள்ளன. இதைப் பாடல்களின் குறிப்பில் கவிஞர் தந்துள்ளது படிப்போரின் நன்றிக்குரிய செயலாகும். இப்படிக் கவிஞர் சக்தியின் தலப்பெயர்களைச் சுட்டுவதன்மூலம் சைவ வைணவத் தலங்களுக்குத் தல யாத்திரை செய்து வழிபட்ட அன்னாரது உண்மை புலப்படுவதோடு இப்பல்லாண்டையும் குறுந்தாண்டகத்தையும் படிப்போர்களும் ஒரு சேரச் சென்றுவந்த பெருமிதத்தை அடைவர் என்பதில் ஐயமில்லை.

ஆன்மாக்கள் உணர்த்த உணரும் அறிவுடையன என்பது சைவசித்தாந்தக் கொள்கை. இதனை ''விடிவறியா உயிர்கள் பால் மீன்போல் விழி நோக்கி அருளே செய்யும் கயல்விழியே'' என்றும்

எல்லையிலாக் காலவினை சிலந்தியாக
எழுப்பிவிடும் துன்பப் பின்னல்

தொல்லையினில் வீழுமுயிர்த் துயர்துடைக்கத்
தோகையுரு உமையு மாவாய்

என்றும் மிக எளிமையாகப் பாடியுள்ள தெய்வப்பனுவல்களின் திறம் வியந்து பாராட்டிற்குரியது.

மேற்படியான கருத்தையே வேறோரிடத்தில் புதிய கோணத்தில் மெருகூட்டிக் காட்டுவது சிறப்பாக உள்ளது. ஆன்மாக்களுக்கு அருள்புரிய தேவி காத்துக் கிடக்கின்றாள். குழந்தையை ஆரத் தழுவத் துடிக்கும் தாய்போல் ஆன்மா

தன்னை நெருங்கி வர ஏங்குகிறாளாம். அவள் அருளார் அமுதத்தை வாரி வழங்கக் காத்திருக்கின்றாள். ஆனால் அதைக் கேட்டுப் பெற ஆன்மா வரவேண்டுமே! அவள் சொர்க்கத்தின் கதவைத் திறக்கத் தயாராக இருக்கிறாள். ஆனால் ஆன்மா வந்து தட்ட வேண்டுமே! என்று அகில உலகத்தையும் ஈன்ற அருட் சக்தி ஏங்குவதாகக் கவிஞர் பல்லாண்டில் குறிப்பிடுவது புதுமையாக உள்ளது. ''உனை வணங்காப் பித்தனாம் என்பிஞ்சு அன்புக் கேங்குகிறாய்'' என்ற பாநயம் தாயுள்ளத்தின் ஏக்கத்தை நெருடும் ஒன் றன்றோ! ஆன்மாவைப் பக்குவப் படுத்தி அரவணைக்கும் ஆண்டவனின் கருணைத் திறத்தை வெளிப்படுத்தும் சைவ சித்தாந்த கருத்துத் தொனியே அம்மைப் பல்லாண்டாக வெளிப் பட்டது எனலாம்.

உன்னடியைப் பரவுதற்கு மண்ணகந்தான் என்ற பாடல் மிக அற்புதமானது. உலகமே அவளை அர்ச்சிக்கிறது என்ற உயிர்த் துடிப்பான ஒன்றைப் புலப்படுத்துகிறது அப்பல் லாண்டுப் பாடல். தான்பூத்தளிக்கும் பூக்களால் மண்ணகம் அம்மையை வழிபடுகிறதாம். வானும் கடலும் மழையாலும் முத்தாலும் போற்றுகின்றனவாம். நெருப்பு காற்றுடன் சேர்ந்து அகிற் புகை மணம் பரப்பி வழிபடுகின்றனவா. இப்படி மண்முதல் விண் ஈறாக உள்ள ஐம்பூதங்கள் எல்லாம் அம்மையை வழிபடுவதாகக் காட்டும் கற்பனை வெறும் பகட்டிற்கன்று. ஐம்பூதமாக அம்மை எங்கும் கலந்துள்ளாள் என்பதை உணர்த்தவே அங்ஙனம் பாடப்பட்டது எனலாம்.

மானுடம் தெய்வ நிலைக்கு உயர வேண்டும். அதுவே மனிதப் பிறப்பின் துணிபொருள் உண்மை இதற்கு வையத் துள் வாழ்வாங்கு வாழ்தல் வேண்டும். வாழ்தல்தான் எப்படி? இதற்குக் கவிஞர் திருமகள் திருக்குறுந்தாண்டகத்தில் அருமையான பாடல் ஒன்றைத் தருகிறார்.

தருவினை அடைய வேண்டின்
தரணியில் வெற்றி வேண்டின்

பெருவினை அகல வேண்டின்
பெரும்புகழ் சூட வேண்டின்

திருவொடு சுற்றம் மக்கள்
தெளிவுறு ஞானம் வேண்டின்

திருமகள் தாளை நோற்போம்!
திருவருள் எய்தி வாழ்வோம்!

இது அறிவுரைக்குரிய பாடலாகவும் மானுட வாழ்வியலை உணர்த்தவல்ல பாடலாகவும் பாடப்பட்டுள்ளது. தீவினை நீங்கி, சுற்றம் சூழத் தெளிந்த ஞானச் செருக்குடன் வாழ்தலே மானுட வாழ்வியலின் குறிக்கோள், இதற்குத் திருமகளின் திருத்தாள்களே சரண் என்கிறார் கவிஞர். இக் கருத்தொன்றையே இந்நூற்பயனாகக் கொள்ளினும் தகும் எனலாம்.

அடுத்து, திருமகளை வழிபட்டால் அடையும் வேறு பேறு யாது என்பதற்கு வடிகாலாகக் கவிஞர் ஓர் அரிய கருத்தைச் சிறப்பாகக் கூறுகிறார்.

தன்பெரும் நிதியை ஈந்தாள்,
தாங்கொணா வறுமை என்னும்

என்பெரும் உடைமை ஏற்ற
கருணைக்கோர் ஈடும் உண்டோ!

இதில் திருமகள் ஏற்றுக் கொள்வதும் வழங்குவதும் பற்றிய கருத்து கூறப்பட்டுள்ளது. அவள் வழங்குவது அருள், ஏற்பது பக்தர்களின் தாங்கொணா வறுமை. வளமையை வழங்கி வறுமையை ஏற்கும் கருணைக் கடலாக உள்ளவள் திருமகள். எல்லோருடைய பாவங்களையும் தாங்கும் கங்கை

யைப்போல உள்ள திருமகளை ''அன்பால் வழுத்தவல்லார் அருளினை அடைவர்தாமே'' எனப் பலாபலன் கூறி அழைக்கும் இத்திருப் பாட்டு கரையேறத் துடிக்கும் ஆன்மாவின் கலங்கரை விளக்கன்றோ !

மதுரை என்றாலே அனைவர்க்கும் நினைவில் வருவது தேமதுரத்தமிழும் மீனாட்சியுமே ஆகும். சொக்கேசன் இடப் பாகம் அமரும் மீனாட்சி ''தாய் தமிழ்ச் சங்கம் தோற்றும் தமிழணி'' பூணுபவளாகக் கவிஞர் பாடியுள்ளார். இதில் கவிஞரின் தமிழ்ப்பற்று விளங்குகிறது.

> தாய்தமிழ்ச் சங்கம் தோற்றும்
> தமிழணி பூணு வாளைத்
>
> தேய்பிறை சூடும் பெம்மான்
> திருமேனி பாதி கொண்ட
> மாயவன் தங்கை.

ஈண்டு மீனாட்சி தமிழைப் பூண்டிருக்க அவள் கணவன் சிவனோ பிறையை அணிந்திருப்பதாகப் பாடியதில் நுட்பம் அமைந்துள்ளது.

சிவன் அணிந்த பிறை தேய்பிறை. அதாவது தேய் மானம் உடையது. ஆனால் மீனாட்சியணிந்த தமிழ் தேய் மானம் இல்லாதது. அதனால் அழியாதது என்பது பொரு ளாயிற்று. மேலும் அது சங்கத்தாரால் போற்றி வளர்க்கப் பட்டது. பலரின் போற்றுதல் தமிழுக்கு உண்டு. ஆனால் தேய் பிறையோ பலரின் தூற்றுதலுக்கு ஆளாவது. எனவே அழியா அழகுடைய மீனாட்சி அழியா அருமையுடைய தமிழை அணிந்திருப்பது இயல்புதானே! அப்படிப் பட்டவள் தரும் அருளும் அழியாது என்பதால் அவளைத் தொழும்படிச் செய்யும் கவிஞரின் பாட்டுக்கும் அழிவில்லை என்பது உண்மை யன்றோ!

தலங்கள்தோறும் சென்று வழிபடும் அருளாளர்கள் தாம் பாடும் அவ்வத் திருத்தலப் பாடல்களில் அத் திருத்தலக் குறிப்பைச் சுட்டிப் பாடுவதென்பது இயல்பு. அவ்வாறே ஈண்டும் கவிஞர் காரைக்குடி முத்துப்பட்டண மீனாட்சியைப் பாடுங்கால் ''கோவிலில் ஆவுடையாய்க் கொலுவிலிருந்து அருளைப் பெய்யும் தேவி'' எனச் சிறப்பிப்பதில் ஓர் உண்மை வெளிப்படுகிறது. முத்துப் பட்டண மீனாட்சி கோயிலில் அம்மைதான் மூலவராயினும் மூலவர்க்குரிய திருவுருவமாக ஆவுடைப் பீடம் மட்டுமே உள்ளது. அப்பீட ஆவுடையைத் தேவியாக நினைந்து வழிபடும் வழக்கம் இன்றும் உண்டு. இப்படியாகத் தெய்வீகத்தை மண்வாசனையோடு பாடிய கவிஞரின் பக்தி வாடை வீசும் பாநலத்தை என்னென்பது!

கொப்புடையம்மன் பற்றிய பாடல்கள் தமிழ் அருச்சனை யாகப்பாடப்பட்டுள்ளன. பாடலின் தொய்வில்லாத்தொகுப்பும் முடிப்பும், கொப்பாத்தாளைத் துதிக்கத் தூண்டுகின்றன கண்டாரை வியக்கும் கொப்பாத்தாளின் அழகு ''கொள்ளை அழகு'' என வியக்கிறார் கவிஞர்.

ஆயிரம் கமலப் போதின்
அரும்பவிழ் அழகே போற்றி

என்ற எடுப்பான தொடுப்பு கொப்புடையாளின் அழகைக் கோலமிடுகின்றன. ஆயிரம் தாமரை மலர்கள் ஒன்றாக மலரும் போதுள்ள அழகை மனக்கண் நிறுத்தும் எழுத்துத் தூரிகைகளால் தீட்டிய திறம் தெய்வீகமானது. இது,

ஆயிரம் கோடி காமர் அழகெலாந்
திரன்டொன் றாகி

மேயின எனினுஞ் செவ்வேள் விமலமாம்
சரணந் தன்னில்
தூயநல் லெழிலுக் காற்றா

என்ற கச்சியப்பரின் கந்தபுராணச் செய்தியோடு ஒப்ப நோக்கி இன்புறத் தக்கதாகும்.

அருளும் ஆற்றலும் கலந்த ஒன்றே சக்தி என்ற சக்தித் தத்துவத்தை உறுதிப் படுத்துவதைப் போல நாச்சியா புரத்து நாச்சி யாரை வருணிக்கிறார் கவிஞர்.

திருவாகி வீரமாகி வினைபோக்கும்
தேர்ப்படையு மாவாய்

என்று பாடுவதால் நாச்சியாரின் பரத்துவம் விளங்குகிறது. மேலும் ''காலத்தொடு கற்பனை கடந்த கருவூலத்துப் பழம் பாடல்'' என அன்னை மீனாட்சியைக் குமர குருபரர் கூறு மாப் போல ஈண்டுக் கவிஞரும் ''பரந்தெழுந்த கற்பனையில் விளைகின்ற கவியுமாவாய்'' என நாச்சியை நாவாரப் போற்றுவது சிறப்பாக உள்ளது

பாவாக, பாவின் பனு வல்களாகப் பராசக்தியை பார்க்கும் கவிஞர் கவிதைக் குரிய இலக்கணக் கூறுகளை ஆங் காங்கே குறிப்பிட்டுச் செல்வது நீள நினைந்து போற்றுமாறு உள்ளது. கற்பனையில் கவிதை பிறக்கும் என நாச்சியாரைப் பற்றிக் கூறுகையில் பாடியவர் ''எண்ணத்தில் உள் மலரும் கவி'' எனத் திருப்பல்லாண்டிலும் கூறுவதிலிருந்து கவிஞரின் கவிதை மூலத்தைச் சுவைக்க முடிகிறது.

தேவியின் திருநாம மகிமைக்கு ஈடில்லை என்பது கவிஞரின் கோட்பாடாக முத்துப்பட்டண மீனாட்சி பாடலில் புலப்படுகிறது. ''தீதிலா அருவி வீழத் திரளும் மின் சக்தி போல, ஓதியே உன்றன் நாமம் உருகிட ஞானம் ஈவாய்'' என்பதில் அம்மை ஆன்மாக்களுக்கு அருளும் திறம் பற்றிக் கூறுவது புதுமையாக உள்ளது. தேவியின் திருநாமத்தைச் செபித்தால் வாழ்வில் மின்னி உயரலாம் என்பது கருத்து. திருநாமத்தை இடையறாமல் செப்ப வேண்டும், எப்படி? தீதிலா அருவியில் எல்லாக் காலத்தும் வற்றாமல் ஓடிவரும் நீரைப் போல நெஞ்சில் ஊறும் இன்ப அன்பால் இடையறவு இன்றி ஓத வேண்டும். நீர் நிறைந்தால்தான் மின்சார உற்பத்தி இருக்கும். அது போல் நாம செபத்தால் வாழ்க்கை

மின்னொளி பெறும் என்ற பொருள் பொருத்தங்கள் பாடல் களைப் படிக்கத் தூண்டி நெஞ்சைப் பக்குவப் படுத்து கின்றன.

அனைத்து கலைகளுக்கும் காரியங்களுக்கும் சக்தியே மூலம் என்பதை அவளின் அம்சமாகிய கலைமகள் கலை வாணி பற்றிய பாடல்கள் உணர்த்திக் காட்டுகின்றன. அறியாமை வளரா நெஞ்சில் குடிகொண்ட கலையழகானவள் கலைமகள் என்றும் ஆயிரம் தொழிலாய் அகன்று விரிந்தவள் கலைவாணி என்றும் கவிஞர் சக்தியின் சாட்சியாய்க் குறிப் பிடுவதெல்லாம் உலகமே சக்திமயம் என்ற சக்தித் தத்து வத்தை உறுதிப் படுத்துவதைப் போல உள்ளது.

திருமுறைத் தோய்வும் அஞ்செழுத்து மறவாச் சிந்தையும் கொண்ட கவிஞர்கோ டாக்டர் ரெ. முத்துக்கணேசனார் அவர்கள் பழுத்த தமிழ்ப்புலமை பாலித்த வகையில் பாடியுள்ள இத்தெய்வப் பாமாலையில் இன்னும் எவ்வளவோ உள்ளன. எனினும் கடலாழத்தைக் காணமுடியாததைப்போல இக் கவியாழத்தைக் கண்டாலும் தகும் என்பதால் ஆயுந் தொறுந் தொறும் தமிழ் இனிப்பதை இத்தெய்வப் பாமாலையைப் பயில்வார் உணர்வர்.

உணர உணர்த்தும் தேவியை உணர வைக்கும் உருப் பெருக் கண்ணாடியாக உள்ள இத்தெய்வப் பனுவல் திரட்டை அன்பர்கள் கையில் எனது முன்னுரையுடன் கொடுக்க விழைந்த கவிஞர்கோ அவர்கட்கு நன்றி கூறி அன்னையின் அருளை வழுத்துகின்றனன்.

கவிச்செம்மல் கவிஞர்கோ

# டாக்டர் ரெ. முத்துக்கணேசனார்

அருளிய பாடல்கள்

# அம்மை திருப்பல்லாண்டு

1

நறுந்தளிரே ! மருக்கொழுத்தே ! மரகதமே
நாட்காலை பசுமை பூப்பாய் ;
குறுந்தளிராம் கொடிவீட்டில் பிச்சியெனும்
குறும்பூவாய் இன்பம் ஈவாய் ;
சிறந்தொளிசேர் செம்பூவும் பசுந்தழையும்
சேர்ந்தனபோல் சிவமும் நீயும்
அறந்தழைக்க நேர்பாதி கலந்தகோல
அழகினுக்கா யிரம்பல் லாண்டு.

2

விடிவறியா உயிர்கள்பால், மீன்போல
விழிநோக்கி அருளே செய்யும்
கடிகமழும் மலர்க்கூந்தல் கயல்விழியே !
கண்களிக்க அள்ளி யுண்டே
அடிமுதலாய் அழகனை நீ அணைந்தமையால்
அழகம்மை ஆனாய் நீயோ !
படிஎழுத வொண்ணாத பல்வளையாய் !
பரிசினுக்கா யிரம்பல் லாண்டு.

---

1 பெயர். மரகதவல்லி (ஊர். ஈங்கோய்மலை)

2 பல்வளைநாயகி (திருப்புள்ளமங்கை ; பட்டீச்சரம்)
அழகம்மை (திருக்களக்காமூர் ; திருமழபாடி ; திருமாந்துறை)

3

முல்லைமுதல் மக்களுயிர் அத்துணைக்கும்
மூலத்தாய் நீயே யன்றோ !
எல்லையிலாக் காலவினை சிலந்தியாக
எழுப்பிவிடும் துன்பப் பின்னல்
தொல்லையினில் வீழுமுயிர்த் துயர்துடைக்கத்
தோகையுரு உமையு மாவாய் ;
அல்லலிலாப் பெருவாழ்வே ! அருமருந்தே !
அன்பினுக்கா யிரம்பல் லாண்டு.

4

படியறியோம் ; நின்பதத்தின் பாங்கறியோம் ;
பல்வேறு வினைகள் தம்பால்
இடியுருகும் கொடுஞ் செயல்கள் இழைத்த போதும்
இன்னுயிர்பால் கனிவு கண்டோம்
படிவளரப் பொருளீந்து உணவூட்டிப்
பார்புரக்கும் முத்தம் மையே !
அடிதொழுவோம் அடைக்கலங்காண் அறம்
வளர்த்தாய் !
அருளினுக்கா யிரம்பல் லாண்டு.

5

வெற்றியினைச் செருக்கோடு விரும்பிநின்றேன் ;
விளையாட்டாய்த் தோல்வி தந்தே
பற்றுடைய ஆணவத்தின் முனைமழுங்கப்
பனிமுறுவல் செய்த எந்தாய் !
வெற்றுருவக் கருங்கல்லாய்க் கிடந்தநெஞ்சை
வெண்கமலப் பூவாய் ஏற்றுப்
பொற்புருவாய் அருள்தருவாய் ! பூங்கோதாய் !
புதுமைக்கா யிரம்பல் லாண்டு.

---

3 தோகையாம்பிகை (திருப்பாதிரிப் புலியூர்)
உமையம்மை (திருவிடையாய் ; திருவூரல்)
அருமருந்தம்மை (திருந்துதேவன்குடி)
4 முத்தம்மை (திருஆமாத்தூர்)
அறம்வளர்த்தநாயகி (திருவையாறு)
5 பூங்கோதை (திருக்காளத்தி ; துறையூர்)

## 6

சீர்பெரிய நிலமெல்லாம் முகில்வழங்கும்
சிறுதுளிக்கே ஏங்கு மாப்போல்
நீர்பெருக்கும் கடலனைத்தும் நிறையமுத
நிலவொளிக்கே ஏங்கு மாப்போல்
பேர்பெரியாய் ! உனைவணங்காப் பித்தனுமென்
பிஞ்சன்புக் கேங்கு கின்றாய் ;
ஏர்சிறக்கும் ஏலவார்பூங் குழலம்மை
எளிமைக்கா யிரம்பல் லாண்டு,

## 7

நீர்நிலத்தில் மதுப்பூவைத் தென்றலுமே
நிதந்தழுவ மணமே கொள்ளும் ;
தேர்புலத்தால் கவியமுதம் உண்டவுள்ளம்
தெளிந்தறிவு பெற்றே வாழும் ;
பேரருளே ! அஞ்செழுத்தை நெஞ்சகத்தே
பிரிந்தறியா எளியன் தன்னைப்
பாரதனுள் கண்பாராய் ; பால்மொழியே !
பரிவினுக்கா யிரம்பல் லாண்டு.

## 8

உன்னடியைப் பரவுவதற்கு மண்ண கந்தான்
ஒளிர்பூவைப் பூத்துப் போற்றும் ;
மின்னுபெரும் ஆழியொடு வானமும்
மின்முத்தால் நீரால் போற்றும்
தின்னவரு செந்தழலோ அகிற்புகையைத்
தென்றலுடன் தூவிப் போற்றும் ;
பொன்னடியை எங்ஙனம் நான் போற்றிடுவேன்?
புகழினுக்கா யிரம்பல் லாண்டு.

---

6 ஏலவார் குழலி (திரு ஏற்குடி ; திருவேட்களம்)

7 பாலினும் நன்மொழி (திருவாய்மூர்)

## 9

மண்ணகத்தில் படிவதனைச் சிற்பியர்கள்
மாண்புறவே சமைத்துத் தந்தார்
மண்ணகத்தில் ஓவியர்கள் வளர்ந்துன்றன்
மாணடியைத் தொழுது நின்றார் ;
எண்ணகத்தில் உள்மலரும் கவிஇதழால்
எழிலடியைத் தொட்டேன் ; எந்தம்
பண்ணகத்துத் தமிழேற்பாய் ; பண்மொழியே !
பண்பினுக்கா யிரம்பல் லாண்டு.

## 10

இருள்இரியச் சுடர்வயிரம் இணைந்தமுடி
அழகினுக்குத் திருப்பல் லாண்டு !
பொருள்விரிக்கும் விழிகளொடு புதுமுறுவல்
அழகினுக்குத் திருப்பல் லாண்டு !
மருளகற்றிச் சிவம்கலந்த மணக்கோல
அழகினுக்குத் திருப்பல் லாண்டு !
அருள்பொழியும் அங்கயற்கண் அம்மைக்குப்
பல்லாண்டு திருப்பல் லாண்டே !

---

9 பண்மொழியம்மை (திருப்பாண்டிக் கொடுமுடி)

# மதுரை மீனுட்சி

1

கண்ணெளிச் சோதி யாளைக்
கருதுவார் உருவத் தாளைப்
பண்ணெளிர் தேவா ரத்தைப்
பரவுவார் நெஞ்சத் தாளை
உண்ணினைந் துயிரைக் காக்கும்
மீனுட்சி நாமத் தாளை
தண்மதுரை ஆளும் ஆதித்
தலைவிதாள் வழுத்து வோமே!

2

ஆயிரம் மறைக ளாலும்
அறியொணுத் தேவி யாளைத்
தாய்தமிழ்ச் சங்கம் தோற்றும்
தமிழணி பூணு வாளைத்
தேய்பிறை சூடும் பெம்மான்
திருமேனி பாதி கொண்ட
மாயவன் தங்கை யாளை
மனத்தினுல் சிந்திப் போமே!

உலகினில் கமலம் பூக்க
ஒளிர்கதிர் உதவு மாபோல்,
உலகுயிர் உய்ய நோக்கும்
ஒளிர்மீனக் கண்ணி யாவாள் ;
திலகமாம் நகரத் தார்தம்
திருவளர் செல்வ மாகும்
கலைசெறி மரக தத்தின்
கழலடி காப்புத் தானே !

முத்துப்பட்டணம்

# மீனுட்சி அம்மை வாழ்த்து

1

திருவிளக்கே! வைரக் குன்றே!
தெளிவுடையார் நெஞ்சில் தோன்றும்
மருளுருவ ஆணவத்தின்
மதம்போக்கும் வீரத் தாயே!
திருவளர்க்கும் நகரத் தார்தம்
திருக்கோயில் கொண்டு வாழும்
அருளுருமீ னுட்சி அம்மா!
அடைக்கலம் காப்பாய் போற்றி!

2

தீதிலா அருவி வீழத்
திரளும்மின் சக்தி போல
ஓதியே உன்றன் நாமம்
உருகிட ஞானம் ஈவாய்!
நீதியே செல்வ ஊற்றே!
நிறைமுத்துப் பட்ட ணம்வாழ்
ஆதிமீ னுட்சி அம்மா!
அடைக்கலம் காப்பாய் போற்றி!

பூவினில் மணமும் நீயே
புதுப்புதுக் கலைகள் நீயே
பாவினில் தமிழே யாகிப்
பயன்தரு நூலும் நீயே
கோவிலில் ஆவு டையாய்க்
கொலுவிருந்து அருளைப் பெய்யும்
தேவிமீ னாட்சித் தேவே!
அடைக்கலம் காப்பாய் போற்றி!

# கொப்புடையம்மன்

1

ஆயிரம் கமலப் போதின்
அரும்பவிழ் அழகே போற்றி
தூயஅம் பரிதி தோற்றும்
தொல்கதிர் ஒளியே போற்றி !
தீயவை அணுகா வண்ணம்
திருவுறை காரை நல்லூர்க்
கோயிலில் அமர்ந்த தேவி
கொப்புடை அம்மே போற்றி

2

அம்மையே போற்றி ! மக்கள்
அல்லலைத் துடைப்பாய் போற்றி!
செம்மையாம் வண்ணம் கொண்டான்
திருவெலாம் ஆனாய் போற்றி
வெம்மையாய் வினைகள் சூழ
வெம்பிடும் உயிர்க்கு வாழ்வை
அம்மையே கொப்பு டையாய்
அளிக்கும்உன் கருணை போற்றி !

3

மதிநலக் கலையே போற்றி
மன்னிய அண்டங் கட்கோர்
விதியெனத் தோன்றி மூல
வினையென ஆவாய் போற்றி !
நதிதரு குடநீர் கொள்ளும்
நல்விழாக் கொள்வாய் போற்றி!
துதிபெறு கொப்பு டையாய்
துணையடி போற்றி! போற்றி !

# நாச்சியாரம்மன்

1

நாவார்ந்த திருமுறைகள் ஒலிக்கின்ற
நாச்சியார் புரத்தில் வாழும்
காவார்ந்த நகரத்தார் கட்டிவைத்த
திருக்கோயில் கொண்ட நாச்சி!
பூவார்ந்த சூலத்தார் பொருந்துடலில்
பாதியினைப் பெற்ற அம்மா!
தேவார்ந்த உயிர்ப்பயிர்க்கோர் முகிலாகும்
தேவிநீயே காப்பாய் போற்றி!

2

அருவாகி மனத்துவளர் எண்ணமெனும்
அருங்கயிற்றுல் இன்ப துன்பம்
உருவாகி இவ்வுலகு நடப்பதற்கே
உணர்வூட்டி இயக்கும் நாச்சி!
திருவாகி வீரமாகி வினைபோக்கும்
தேர்படையு மாவாய்; மூலக்
கருவாகிச் செல்வத்துப் பொருள்வழங்கும்
செல்விநீயே காப்பாய் போற்றி!

3

விண்ணுவாய்; பரந்தெழுந்த கற்பனையில்
விளைகின்ற கவியு மாவாய்;
பண்ணுவாய்; காதலினுல் கசிவோர்க்குப்
பரிந்தருளும் தாயு மாவாவாய்;
எண்ணுவாய்: உலகுக்கோர் எழிலுமாவாய்;
இன்கருணை நாச்சி யாவாய்:
கண்ணுவாய்; ஞானத்தின் ஒளியாவாய்;
கலையாவாய் காப்பாய் போற்றி!

# திருமகள்

## திருக்குறுந்தாண்டகம்

1

அடர்கரு முகிலிற் செம்மை
    அழகுறக் கலந்தா லன்ன,
படர்அறம் பூப்ப தேபோல்
    பாம்பணை அப்பன் மார்பில்
இடர்கெட எழுந்த தாயை
    ஈடிலாச் செல்வம் ஈந்து
சுடர்விடும் பவளத் தாளைத்
    துயரறப் பரவு வோமே!

2

முத்தினை மரக தத்தை
    முழுமையை அழகுக் கெல்லாம்
வித்தினை உயிர்கள் வாழ
    விளங்கிடும் அமுதந் தன்னை
அத்தனின் நெஞ்சை ஆளும்
    அழகியைக் கமலத் தாளைப்
புத்திளங் கனியை வண்ணப்
    பொலிவினைப் போற்று வோமே!

---

1 பெயர் - பவளவல்லி ஊர், பவளவண்ணம் காஞ்சிபுரம்)

2 மரகதவல்லி (திருவெள்ளியங்குடி) 2 அமுதவல்லி (உலகளத்த பெருமாள் கோயில்) அழகியவல்லி (அன்பில் கமலவல்லி (தஞ்சை மாமணிக் கோயில்)

3

ஆம்பலாய்த் தாம ரையாய்
ஆங்கங்கே பூத்த மங்கை
கூம்பிய இதழ்தி றந்து
குளிர்தரு மணமே ஆவாள் ;
பூம்பிணைக் கண்ண ளோடு
பொற்கொடி நாச்சி நாமம்
தேம்பியே உரைப்பார் அல்லால்
தீவினை அகன்றார் யாரே ?

4

உய்யவோர் பற்றுக் கோடாய்
உயிரினுக் குயிரே ஆவாள் ;
தெய்வமா மறைகள் காணுக்
தேவியைத் திருவி ளக்கை,
மையலே அனுகா வண்ணம்
மனத்தினை நிறைகொள் வாளைச்
செய்யசீர் மேனி யாளைத்
திருவினைச் சிந்திப் போமே !

5

அரும்பிய ஆசை மூன்றை
அனலுறு மெழுக தாக்கும் ;
இரும்பன அகந்தைப் பேய்கள்
இயல்பினைச் சாடிப் போக்கும் ;
அரும்படை வீரம் ஆவாள் ;
அன்னையை ஆதி யாளைக்
கரும்பினை நினைவார் வாழ்வில்
காப்பினைக் காணு வாரே!

---

3 தாமரையாள் திருவாரன்விளை ; ஆறம்முளை பொற்கொடி நாச்சியார் (திருப்புலியூர் ; குட்டநாடு;
4 பெருந்தேவி : அத்தியூர் காஞ்சி)
5 ஆதிநாவல்லி (திருக்குருகூர் : ஆழ்வார் திருநகரி)

6

பாயுநீர் அருவி போலப்
பல்கலை செழிக்கத் தோன்றி
ஆயுநர் உள்ளந் தோறும்
அகத்தினில் காட்சி நல்கும்
மாயனார் நெஞ்சத் தாளை
மட்டவிழ் குழலி னாளைச்
சேயனேன் புகழப் போமோ?
செப்பநா வலிவி லேனே!

7

துன்பினைக் காட்டி, மக்கள்
தொல்வினை துடைத்து, ஞான
இன்பினைப் பெய்வாள் வாழ்வை
இயக்கிடும் விதியை நெய்யும்
அன்பினைச் செண்ப கத்தை
அல்லிமா மங்கை தன்னைப்
பொன்னியைப் பணியும் தொண்டர்
புகழினை ஆள்வர் தாமே!

8

மருவளர் துளவம் போற்ற
மார்பினில் அணிந்து காத்தாள்!
உருளுறு நேமி சங்கம்
உய்யவே ஆத ரித்தாள்;
உருவினில் உருகு வாரை
உகந்திடும் ஆண்டாள் தன்னை
கருணையை சுந்த ரத்தைக்
கழறு வார்க்கினிய வாறே!

---

6 மட்டவிழ் குழலி (காழிச் சீராம விண்ணகரம், தாடாளன் சந்நிதி)
7 செண்பகவல்லி நந்திபுர விண்ணகரம் (நாதன் கோயில்]
அல்லிமலர்நாச்சியார் (செம்பொன் செய் கோயில்)
8 ஆண்டாள் (திருவல்லிபுத்தூர்)
சுந்தரவல்லி (திருமாலிருஞ்சோலைமலை (அழகர் கோயில்)

9

பழுதிலா இசையை மாந்திப்
பற்பல ஓசை கேட்டாள்;
விழுதிடை வாழும் புள்ளின்
வியத்தகு ஒலியும் ஏற்ருள்;
பழுதுறும் பொருளாம் என்சொற்
பாமலர் அணிந்தாள்; செல்வக்
கொழுந்துதன் எளிமை என்னே!
குணக்கடல் சிக்கி னேனே!

10

தன்பெரும் நிதியை ஈந்தாள்;
தாங்கொணு வறுமை என்னும்
என்பெரும் உடைமை ஏற்ற
கருணைக்கோர் ஈடு முண்டோ?
என்பெலாம் இனிக்கத் தோன்றும்
எழிலியைக் கற்ப கத்தை
அன்பினல் வழுத்த வல்லார்
அருளினை அடைவர் தாமே!

11

தருவினை அடைய வேண்டின்
தரணியில் வெற்றி வேண்டின்
பெருவினை அகல வேண்டின்
பெரும்புகழ் சூட வேண்டின்
திருவொடு சுற்றம் மக்கள்
தெளிவுறு ஞானம் வேண்டின்
திருமகள் தாளை நோற்போம்!
திருவருள் எய்தி வாழ்வோம்!

---

9 செல்வத் திருக் கொழுந்து திருவல்லம்வாழ் திருவல்லம்)
10 கற்பகவல்லி திருக்கடித்தாளம்)
11 பூவார் திருமகள் (திருவெள்ளக்குளம் அண்ணன் கோயில்)

# கலைமகள்

1 புல்லும் வயிரப் படையாகும் ;
பூவும் ஆட்சிக் கோலாகும் ;
கல்லும் தெய்வ வடிவாகும் ;
காற்றும் இசையின் தாயாகும் ;
சொல்லும் சொற்கள் பாவமாகும் ;
தோன்றும் உணர்வு நிலையாகும் ;
வெல்லும் செயலுக் கருளாவள்
வித்தைத் தெய்வம் கலைமகளே !

2 எல்லா வுயிரும் இன்புறவே
எண்ணிக் காக்கும் கலைத்தெய்வம் !
கல்லா மனத்தை அறிந்தங்கு
கருணை பொழியும் அருட்டெய்வம் !
வல்லான் வகுத்த வழிக்குள்ளே
வாழத் துடிக்கும் உயிரினத்தில்
பொல்லாத் துயரைத் துடைத்தங்கு
பொங்கு நலமே புரிதெய்வம் !

3 தேடிக் காணுத் தத்துவமும்
தேரா அறிவுப் பின்னலுடன்
வாடிச் சாம்பும் அறியாமை
வளரா நெஞ்சப் பண்புகளும்
கோடிப் பொருளாய்க் காலடியில்
கொட்டும் அன்பர் நெஞ்சகத்தை
நாடிச் செல்லும் அன்புடையாள்
நல்ல கமலத் துறைப்பவளே !

4 பெண்ணின் வடிவ முழுமையுளே
பேணும் பண்பு அடங்குவபோல்
வண்ண அழகுக் கலையனைத்தும்
வாரி யுண்ட மாபெரியன்
மண்ணில் நானே என்றுரைத்தால்
மறுப்பா ருண்டோ மேதினியில் !
எண்ணிப் பார்க்கில் கலைமகளே
என்னுள் வாழல் உண்மையன்றே !

5 காக்க விளையும் காப்புளமும்
கலைகள் பிறக்கும் நல்லறிவும்
ஆக்கப் பொருளாய்ப் பூவிதழ்கள்
அலர்ந்து மணக்கும் பல்தொழிலும்
போக்கும் தெய்வ மந்திரமாம்
புனிதப் பாடற் கவிமொழியும்
வாக்கு மங்கைக் கொலுபீடம்
வாணி அருளைப் போற்றுவமே !

# கலைவாணி

1

எண்ணுவார் எண்ணம் நீயே !
எழுத்தொடு அறிவும் நீயே !
வண்ணமும் பொருளும் நீயே !
வழங்குவார் அறமும் நீயே !
கண்ணவர் கல்வி யாளர்
களிபெறு மூலம் நீயே !
கண்ணியம் முதலாம் வீணை
பயில்கலை வாணி போற்றி !

2

பொதிநிறை அறம்வ ளர்ப்போர்
பூமணம் நீயே ! பூவில்
மதிநலம் வாய்க்கப் பெற்றோர்
மனமுறை தெய்வம் நீயே !
பதியென இறையை வாழ்த்தும்
பண்ணிசை மறையில் வாழும்
துதிகலை வாணி நீயே !
தூயசே வடிகள் போற்றி !

தூயவெண் கலையணிந்து
தூயதா மரையிருப்பாய் ;
ஆயிரம் தொழில்கள் ஈவாய் ;
அவைதரும் பயன்கள் ஆவாய் ;
பாய்கதிர் ஒளியைப் போலப்
பல்கலை வளர்த்து ஞாலத்
தாயென நிற்கும் வாணி
தளிரடி போற்றி ! போற்றி !